## அரிச்சந்திர நாடகம்.

நெ 99 பிளேட் நெ 1999.

இராகம் - ஸ்ரீராகம், தாளம் - ஆதி.

பனியால் நனைந்து வெயிலா லுலர்ந்து
பசியாலலைந்து முலைவாய்
அனியாய வெங்கண் அரவாலிறந்த
அதிபாவ மென்கொ லறியேன்
தனியே கிடந்து விடநோய் சொறிந்து
தரைமீ துருண்ட மகனே
இனியாரை நம்பி உயிர்வாழ்வு மென்றன்
இறையோனும் யானுமவமே
செங்கோ லறத்தின் முறையே செலுத்துந்
திறலோ னெவர்க்கு முறவும்
வெங்கோப மன்னன் விரன்மன்னன் நம்மை
விடுவிக்க வெண்ணி வருநாள்
பங்கேருகத்து மலர்போல் விளங்கு
மதனுல் மகிழ்ந்த பரிவால்
எங்கே யென்னுசை மகனென் றுரைக்கின்
எதிரேது சொல்வேன் மகனே.

நெ 100 பிளேட் நெ 1999

வேண்டித்தவம் புரிந்தேன் வெகுவிரத மிருந்தேன்
விரும்பி யுனக்காகவே மகனே மகனே மகனே
ஆண்டியருளால் கருவாகி நீயுதித்த
அடிவயிற்றிடம் தந்தேன் மகனே மகனே மகனே
காலாகால வுணவைக் கடிந்து வொளிமழுங்கி
கறுக்க முலைக்காம்புகள் மகனே மகனே மகனே
தூலம் வதங்கி பால்தோன்றிடக் கண்டுமே
தோஷிமன மகிழ்ந்தேன் மகனே மகனே மகனே.

## அரிச்சந்திர நாடகம்.

நெ 101 பிளேட் நெ 1705.

இராகம் - செஞ்சுருட்டி, தாளம் - ஆதி.

பல்லவி

யார்போய் சொல்லுவார்
இந்தவேளை நாதனுக்கோடி யார்

அநுபல்லவி

பாவிச்சந்திரமதி பழிகாரி பெற்றபாலன்
பாம்புகடித்திறந்து பரமபதம் சென்றானென்று யார்
பார்ப்பானுக் கடிமையாகி பரதேசி போலநாங்கள்
பதைத்து பதைத்து பலதொண்டு செய்தோமென்று
அய்யனின் கட்டளைபோல் அடவிசென்றுமே பாலன்
அரவங்கடித்திறந்துபோய்தான்உயிர்சாய்ந்தானென்று
பேய்கள் கரிபுலிகள் பெருத்த வனந்தனிலே
பாவிசந்திரமதி பிள்ளையை யிழந்தாளென்று யார்

நெ 102 பிளேட்-நெ 5587.

இராகம் - மோகனம், ஆதிதாளம்.

பல்லவி

சத்தியம் நீர்செய்தால் நம்புவேன் தையலைப்
பிரியேனென்று மெய்யாகஎன் முன்னின்று ச

அநுபல்லவி

உத்தமி பாதகி உமைபா மேசன்
உறுதியாய்ச்சொல்கிறேன் உனக்குநான் தாசன்
எத்தினமு முனது மேல்விசுவாசன்
இதற்கு ஐயமில்லை என்றுங்கள் நேசன்

சத்தியமாக சொல்லுகிறேன் சொல்லும் நெறி
பிசகிடா தெனதுள மகிழொடு ச

நெ 103 பிளேட்-நெ. 4930.

இராகம்-தெம்மாங்கு, தாளம்-சாப்பு.

பல்லவி

ஆண்டிப் பண்டாரம் உன்னை
வேண்டிக் கொண்டேனே பழனி ஆ

தண்டாமரை முகனே சாமி சரவணனே
அண்டாதி தேவர்போற்ற ஆறுமுகமாய் விளங்கும் ஆ

பாத தரிசனமே பார்க்கப் பழனிமலை
காதலாய் ஓடிவந்தேன் கால்வலி யகற்றிடுவாய் ஆ

பஞ்சவர்க்குத் தூதுசென்ற பரந்தாமன் றன்மருகா
தஞ்சமெனவே துதித்தேன் சங்கடந்தீர் நீமுருகா ஆ

கானக்குறத்தியின்மேல் காதல்கொண்டு யிங்கிதமாய்
வேணதின மாவைநின்று வேங்கைமரமாய் வளர்ந்த ஆ

கழுகுமலையில் வாழும் கந்தப்பா ஷண்முகனே
தொழுதேனேபாலகனென் துன்பவினைபோக்கிடுவாய் ஆ

நெ 104 பிளேட் நெ 1390

காவடிச்சிந்து.

பூமிமெச்சிடு மண்ணுமலைக்கோர்துணை யானவன்
மயில் வானவன் ஒரு காணவன் தினை
புனத்தைக் கார்க்கும் வள்ளி
தனத்தைப் பார்க்கமெள்ளப் போனவன்

சேமமுற்றகழு காசலேசனையே தேடுதே
மனம்வாடுதே கால்தள் ளாடுதே யிரு
செங்கை தங்கிநின்ற
சங்கினங்கள் கழன் றோடுதே

தென்றலானபுலி வந்துகோபமொடு
சீறுதே தடு மாறுதே
யித ழூறுதே மெத்த
தீமையாமிருளிற் காமலாகிரியு மீறுதே

உள்ள மெள்ள மெள்ள லீலைசெய்ய நினைந்துருகுதே
முத்தங் கருகுதே கண்ணீர் பெருகுதே என்ற
னுச்சிக்கேறி காமப்
பித்தங் கிறுகிறென்று வருகுதே பூமி

நெ 105 பிளேட் நெ 13672.

## காவடிச் சிந்து.

### சுரம்போக்கு நற்றுயிரங்கல்.

### வேறு.

பாதிராத்திரி வேளையில் வீட்டுப்
பக்கத்தில் வந்து மேவிப் பஞ்ச
பாதகனொரு பாவி சிறு
பாவையை மெள்ளக் கூவிக் கையை
பற்றிக் கூட்டிக்கொண் டேகினன்பதை
பதைக்குதே யென்ற னாவி

சோதனைப்பிர காரமா யென்னைத்
தொடர்ந்ததே பெருந் தோஷம் எவர்
சூதினால் வந்த மோசம் இனித்
தொலையுமோ பிள்ளைப் பாசம் இதைச்
சுற்றத்தாரிந் தாலெனக்கு முன்
சொல்வரோ பரியாசம்

தேனிலங்கிய காவணந் திகழ்
  சென்னிமாநகர் வாசன் ஆதி
  செய்யுமண்ணுமலை தாசன் செப்புஞ்
  செந்தமிழ்க்கரு ணேசன் நாளுஞ்
  சிந்தனைசெய்யுந் தொண்டர் தீவினை
  தீர்த்திடு முரு கேசன்
நானிலம்புகழ் கழுகு மாமலை
  நாயகன் பரண்டி நாட்டில் நெஞ்சில்
  நாணம்விட்டுத் தன் பாட்டில் வெப்பம்
  நண்ணிய பாலைக் காட்டில் மகள்
  நடக்கவேண்டி முன் வடக்கமாகத் தெய்வம்
  லபித்ததோ மண்டை யோட்டில்
வையகத்தொரு பையல் பின்செல
  வயது மீறின மாதோ இந்த
  மார்க்கந் தோன்றின தேதோ சென்ம
  வாசனைபல னீதோ அந்தோ
  மாதம்பத்துஞ் சுமந்து பெற்றவென்
  வயிறுந்தானெரி யாதோ
செய்யபஞ்சணை யும்பொறுது
  சிவந்துகொப்பள மாகும் நெரிஞ்
  சிப்பழமென்று நோகும் அவள்
  சீரடிரண்டும் வேகும் படி
  தீயுங்கானலிற் காயும்வேனலாந்
  தீயிலெப்படி போகும்

தேடினுங் கிடையாத தாகிய
திரவியக்கனு கூலம் போலே
செனித்த பெண்ணுக்குச் சீலம் வேறே
திரும்பின தென்ன காலம் வயது
திரண்டிடாமுன்ன மருண்டிடற் கெவன்
செய்தானோ விந்திர ஜாலம்

காடு சேர்க்கையில் காடி வேங்கைகள்
காட்டுமே யார வாரம் அதைக்
காதிற் கேட்ட விசாரம் வைத்துக்
கலங்குவாளந்த நேரம் என்றன்
காதலிதன்னை யாதரித்துயிர்
கார்ப்பது வேலன் பாரம்

நெ 106 பிளேட் நெ 5343

## காவடிச்சிந்து தலைவியிரங்கல்.

இராகம் - முகாரி, அடதாளம்.

நேமமாய்ப்பணி
யண்ணுமலைக் குதவு நீதனைக்
கழுகுமலை நாதனை நெஞ்சில்
நினைக்க நினைக்கமீறி
யெனைக்கொல்லுதே காமவேதனை

கோமளக்கடலி
லேமிகுத்ததிரைக் கூட்டமே
மன்மதன் போ ராட்டமே நாதன்
கோரமே விளைத்தாற்
றீருமோ வெனக்கு வாட்டமே

வெள்ளத் திரையின்மேலே
துள்ளித் திரியுஞ்சுரு மீனமே
யினியு முண்டோ மானமே மன
எக்கங் கொண்டதனு
லேற்குதில்லை யன்ன பானமே

அள்ளற் றனிக்கரையுள்
மெள்ளக் குலாவிவரு மாமையே
கொடிய காமத் தீமையே நாளு
மதிகரித்திடலவ
மதிக்குது இந்தச் சீமையே

பொங்கு மருவுமலர்
எங்கும் பரிமளிக்கும் புன்னையே
பெற்று வளர்த்த அன்னையே எப்
போதும் வைது வைது
மோதுகிருள் பாவி என்னையே

தங்குநித் திலம்புரி
யிங்கிடு வலம்புரி சங்கமே
தென்றலு மோர் சிங்கமே போலத்
தாக்கவே மயங்கி
யேக்கமாய் மெலிந்தே னங்கமே

மங்கைமார்களந்த
ரங்க ணேர்பவள வல்லியே
பிரியேனென்று சொல்லியே போன
வாசக் கடப்பன்வர
நேசத்துடன் சொல்லுமோ பல்லியே

அங்கயத்தினிறை
பங்கயத் துள்ளுறை யன்னமே
பிரியம் வைத்து முன்னமே கண்டு
அன்றுவார்த்தை சொன்ன
ஆசைக் காணேனையா இன்னமே

நெ 107 பிளேட் நெ 13707.

இராகம் - பிலகிரி, தாளம் - சாப்பு.

பல்லவி.

என்ன கேள்விமுறை
இல்லையே சாமி பாராமுகம் இது என்

அநுபல்லவி.

பொன்மயூரப்பிர சன்ன பழனி
மன்ன என்னையா என்

சரணம்

தீராத சஞ்சலம் போராட எனக்கு
தீராது நீயருள் கூராதிருப்பது
சீலங் சொல்லனு கூலங்கொள்ளெனக்
காலம் பொல்லாதே என்

தொடும்பத்தி நெறி குடும்பத்தில் வளர்
கெடும் புத்தியாலே விடும்பித்தன் யானே
துயரமே நித்தம் உயர நான்சித்தம்
அயர வேவிட்டாய் என்

பூமியெல் லாந்தொழ வேமிகுந்தாய் சிவ
காமி சுதாமுத்து சாமிச தாநத்தும்
பூம்பா தாகட ஞம்பாது காக்க
வீம்பா பின்னிது என்

நெ-108 பிளேட் நெ 2115.

இராகம் - சிந்துபைரவி, தாளம் - ஆதி.

மருவே செறித்த குழலார் மயக்கின்
மதனாக மத்தின் விரகாலே
மயலே எழுப்பி யிதமே யருத்தி
மலைநேர் முலைக்கு ளுறவாட
பெருகாத லுற்ற தமியேனை நித்தம்
பிரியாத பக்ஷ முடனேயென்
பிழையே பொறுத்து னிருதாளி லுற்ற
பெருவாழ்வு பற்ற வருள்வாயே
குருவா யரற்கு முபதேசம் வைத்த
குகனே குறத்தி மணவாளா
குளிர்கான் மிகுத்த வளர்போத முற்ற
குடகா விரிக்கு வடபால்வாழ்
திருமால் தனக்கு மருகா வுமைக்கோர்
சிறுவா கரிக்கு மிளையோனே
திருவே ரகத்தி லுறைவா யரக்கர்
சிரமே துணித்த பெருமாளே.

நெ 109 பிளேட் நெ 2116

இராகம் - பைரவி, ரூபகதாளம்.

வன்னத் தினைமாவைத் தெள்ளியே யுண்ணும்
வாழ்க்கைக் குறக்குல வள்ளியே வுயிர்
வாங்கப் பிறந்திட்ட கள்ளியே யிரு
வடமேருவை நிகராகிய
புயமீதணி பலமாமணி
மாலைபடீரெனத் துள்ளியே விழ
வான்மதி வீசுந்தீ யள்ளியே. வன்

## பாம்பாட்டிசித்தர் பாடல்.

நெ 110 பிளேட் நெ 1736.

இராகம் - புன்னாகவராளி, தாளம் - ஆதி.

நாதர்முடி மேலிருக்கும் நாக பாம்பே
நச்சுப்பையை வைத்திருக்கும் நல்ல பாம்பே
பாதலத்திற் குடிபுகும் பைகொள் பாம்பே
பாடிப்பாடி நின்றுவிளை யாடு பாம்பே
குற்றமற்ற சிவனுக்கு குண்டலமானாய்
கூறுந்திரு மாலினுக்குக் குடையானாய்
கற்றைக்குழல் பார்வதிக்கு கங்கண மானாய்
கரவாம லுளங்களித் தாடு பாம்பே
மண்டலத்தை தாங்குமிகு வல்லமை கொண்டாய்
மாயனுக்குப் படுக்கைக்கு வண்ணப் பாயானாய்
கண்டபடை நடுங்கிட காகூதியும் பெற்றாய்
கண்ணேசெவி யாகக்கொண் டாடு பாம்பே

நெ 111 பிளேட் நெ 4273.

இராகம் - ஆரபி, தாளம் - ஆதி பல்லவி.

பிறவாத வரந்தாரும் என்னையனே
பிறவாத வரந்தாரும்
அறிவுடையோர்தொழு தேத்தியதில்லைப்பொன்
னம்பல மாயின் றம்பல மேனியில் பி

எண்பத்துநாலு லட்சம் ராசிகளில்
எடுத்தெடுத்துப் பிறந்திறந்ததோ
புண்பட்டது போதும் போதும்
இனிமேல் புத்தி வந்ததையோ பி
நான் பற்றிடு மனைவிமக்கள் வாழ்வினில்
நாள்தோறும் மனவுலாசங் கழிந்ததும்
இன்பத்துடனே கோபால கிருஷ்ணன் தொழு
தேத்திய ஜகதீசனே நடராஜனே பி

நெ 112 பிளேட் நெ 3477.

இராகம் - ஜம்ஜூடி, ரூபகம் - தாளம்.

பொன் னுலவு செ ன்னிகுள
நன்னக ரண் ணுமலே தன்
புந்தியின் மகிழ்ந்து நித்தம் நின் றவன் முந்தி
வெந்திற லரக்கர்களே வென் றவன் மயில்
போன வேனலின் மீதுலாவிய
ராதமாதமு மேகியேயடி
பூவையே யுனதுதஞ்ச மென் றவன் அவ
ளீயுமாதினையு மென் று நின் றவன் பொ
மின் னுலவு சொன்னமுடி
சென் னியணி விண்ணர்வதே
வேந்திரனுஞ் சித்தர்களுந் துன்னியே கதி
வேண்டியே யகத்திலன்பு மன்னியே பணி
வேல்வன் கிரு பாகரன் குகன்
மேவிடுங் கழு காசலந் தனில்
மிஞ்சியே வளங்களேயா னுன்னியே சொல்ல
ரஞ்சிதமாய்க் கேளடி விற் பன்னியே பொ

திருப்புகழ்.

நெ 113 பிளேட் நெ 5085.

இராகம் - ஆனந்தபைரவி, தாளம் - ஆதி.

தொந்தி சரிய மயிரே வெளிற நிறை
தந்த மசைய முதுகே வளைய இதழ்
தொங்க வொருகை தடிமேல் வரமகளிர் நகையாடி
தொண்டு கிழவ னவனே ரெனயிருமல்
கிண்கி ணெனமு னுரையே குழற விழி
துஞ்சு குருடுபடவே செவிடுபடு செவியாகி

வந்த பிணியு மதிலே மிடையுமொரு
பண்டிதனுமெ யுறுவே தனையுமிள
மைந்தருடமை கடனே தெனமுடுக துயிர்மேவி
மங்கை யழுது விழவே யமபடர்கள்
நின்று சருவ மலமே யொழுகவுயிர்
மங்கு பொழுதுகடிதே மயிலின்மிசை வரவேணும்

நெ 114 பிளேட் நெ 2115.

## திருப்புகழ்.

விதிபோலு மிந்த விழியாலு மிந்து
நுதலாலும் வெற்றி யிளையோர்தம்
விரிவான சிந்தை யுருவாக நொந்து
விறல்வேறு சிந்தை வினையாலே
யிதமாடி யின்ப மதுபோத வுண்டு
விருநாளு மென்று முளமாத
சிருளாய துன்ப மருள்மாயம் வந்து
வெவையிர்வ தென்று மொழியாதே
மதிசூடி யண்டர் பதிவாழ மண்டி
வருமால முண்டு மறமாரன்
வடிவாக வந்த கணையோடு சிந்தும்
வகைநாடு மெந்தை பெருவாழ்வே
யதிமாய மொன்றி வரசூரர் போன்ற
மயில்வேல் கொடென்று பொரும்வீரா
வழகான செம்பொன் மயில்மே லமர்ந்து
வலைவா யுகந்த பெருமாளே.

கீதாமிர்த களஞ்சியம் ஆறும்பாகம் முற்றிற்று.

---

கீதாமிர்த களஞ்சியம் ஏழாம்பாகம் அவசியம் பார்க்கவும்.

நெ 115 பிளேட் நெ 4272.

இராகம் - பைரவி, திருப்புகழ்.

கமலமாது மருந்ததி யுந்துதி
செயவொணாத மடந்தையர் சந்தன
களபசீதள கொங்கை யிலங்கையி விருபோதே
களவு நூல்தெரி வஞ்சனை யஞ்சன
விழியின் மோஹித கந்த சுகந்தரு
கரியவோதியி விந்து முகந்தனின் மருளாதே
அமல மாகிய சிந்தை யடைந்தகல்
தொலை விலாத வரம்பொரு ளின்பமு
மடையவோதி யுணர்ந்து தணிந்தபி னருள்தானே
யறியு மாறு பெறும்படி யன்பினி
னினியநாத சிலம்பு புலம்பிடு
மருண வாடக கிண்கிணி தங்கிய வடிதாராய்

மதுரை மிஸ் அ. சுந்தரம்

நெ-116 பிளேட் நெ 2001.

இராகம் - செஞ்சுருட்டி, தாளம்-ஜம்பை.

சரணகம லாலயத்தை அரைநிமிஷ நேரமட்டில்
தவமுறை தியானம் வைக்க வறியாத
சடகசட மூடமட்டி பவவினையி லேஜனித்த
தமியன்மிடி யால் மயக்க முறுவேனோ
கருணைபுரி யாதிருப்ப தெனக்குறையி வேளைசெப்பு
கயிலைமலை நாதர் பெற்ற குமரோனே
கடகபுய மீதுரத்ன மணியணிபொன் மாலைசெச்சை
கமழுமண மார் கடப்ப மணிவோனே

தருணமிது வாகுமிந்த கனமதுரு நீள்சவுக்ய
சகலசெல்வ யோக மிக்க பெருவாழ்வு
தகமைசிவ ஞானமுத்தி பாகதியும் நீகொடுத்து
தவிபுரிய வேணு நெய்த்த வடிவேலா
அருணதள பாகபத்ம மதுநிதமு மேதுதிக்க
வரியதமிழ்தா னளித்த மயில்வீரா
வதிசய மநேகமுற்ற பழனிமலை மீதிலுற்ற
அழகு திருவே ரகத்தின் முருகோனே

## தமிழ்பதம்.

நெ 117 பிளேட் நெ 2275.

இராகம்-சஹானு, தாளம்-சாப்பு.

பல்லவி

கையில் பணமில்லாமல் கலவி செய்யவந்தீரோ
கடனானல் எழுந்திரும் சாமி கை

அநுபல்லவி.

ஐயரே தென்பழனி அருமை குமரேசரே
அம்மான் மகளானாலும் சும்மா வரப்போறாளோ கை

சரணம்

தெந்தினப் பாட்டுபாடி திருநாம மிடவந்தீர்
சிரித்து சிரித்து என்னை வருந்தியும் கூடவந்தீர்
அந்த காரணத்தாலென் மனதை மயக்கவந்தீர்
ஆரியக் கூத்தாடினாலும் காரியத்தை விடலாமோ கை

## இடைக்காட்டு சித்தர் பாடல்.

நெ 118 பிளேட் நெ 1735.

இராகம்-இந்துஸ்தான் தோடி, தாளம்-மிஸ்ரகதி ஏகம்.

ஆதி பகவனையே பசுவே
யன்பாய் நினைப்பாயேல்

சோதி பாகதிதான் பசுவே
சொந்தம தாகாதோ
எங்கும் நிறைப்பொருளை பசுவே
யெண்ணிப் பணிவாயேல்
தங்கும் பாகதியில் பசுவே
சந்ததஞ் சாருமையே
அல்லும் பகலும்நிதம் பசுவே
யாதி பதந்தேடில்
புல்லுமே மோட்சநிலை பசுவே
பூரணங் காண்பாயே
எல்லா மிருந்தாலும் பசுவே
ஈசாரு ளில்லையே
இல்லாத தன்மையென்றே பசுவே
எண்ணிப் பணிவாயே

திருப்புகழ்.

நெ 119 பிளேட் நெ 1748.

இராகம்-விவர்த்தினி, தாளம்-ஆதி.

முந்து தமிழ்மாலை கூடிக்கோடி
சந்தமொடு நீடு பாடிப்பாடி
மொய்ம்பர் மனைவாசல் தேடித்தேடி யுழலாதே
முந்த வினையே வாராமற் போக
மங்கையர்கள் காதல் தூரத்தேக
முந்தடிமையேனை யாளத்தானென் னுளமீதே
திந்திமி தோதி தீதித் தீதி
தந்ததன தான தானத்தான
செஞ்ச ணகுசேகு தாளத்தோடு நடமாடும்

நெ 120 பிளேட்-நெ 1749.

இராகம் - கல்யாணி, தாளம் - ஆதி.

காமபாணமோ ஈது ராமபாணம்போல்-வெகு
கடினப்பிரயோகமிரும் வடிமைக்குநிகர்தரும்
கட்டினிதழ்இனிவாய்கஸ்தூரிபொட்டிடுமொருபாவாய்
இங்கென்னை விட்டுமேநீ போகாய்
என்னரசி பட்டத்துயில் பாவாய்

வாலிப காலமிதே யிருபேரு
மனோகர லீலைக ளாடுவோமாக
கந்தம் புனுகு சவ்வாது கமழ்ந்திட

வுந்தும்புளக சுகோ யமென்பதைக் காட்டி
பூமாலை குழல் சூட்டி
மடிமேல் வைத்து நீட்டி
வெற்றிலைச் சுரு ளூட்டி
கேலிப் பாட்டி கரும்பு ருசியொடு
தரும்பவளயிதழ்விரும்பி மனமதுதிரும்பி எழில்பல
கண்டும் கண்டும் கண்டும் திமிர்முலை
கொண்டுங்கொண்டுங் கொண்டும்கொடியிடை
கட்டிய பொற்றுயிலை கைநொடிக் குளவிழ்த்
தொரு சர்ப்ப படத்திலிறக்கி

கதலித்துடை யிட்டசைய தருவ
தகிக்கும் குரல் காடைபுறாவொலி
கும் கும் கும்மென வீசிடும்
போகசுகம் தன்னயமொடு

கட்டாய மிட்டாட மிக்கான கொக்கோக
மிப்போதுரைப்பேன் விலக்காதே யிப்போது
கற்றதனை நாடும்புகழ் முத்துசாமி பாடலெனும்
மெத்தைவீடு நீபெறலாம் வைத்துமிருந்தென்னை
தாமதிக்காமலே சோடி தயைகூறடி கா

## தமிழ் கீர்த்தனம்.

நெ 121 பிளேட் நெ 2071

இராகம் - ஸ்ரீராகம், தாளம் - ஆதி.

பல்லவி

நீயேயென்றன் துணையே நீலாயதாக்ஷி நீ

அநுபல்லவி

தாயேபவானி சங்கரி ஸ்ரீவேத நாயகாம்பிகா
தாயேபவானி சங்கரி ஸ்ரீவேத பிரியசுந்தரி
தாயேபவானி சங்கரி ஸ்ரீனிவா சகோதரி நீ

சுரம்.

சா சனிபத நிபமரி கரிசா சமாரி பாம நீபசா
நிரிசகரி கரிசாரி நிசாபனி சரிகரி சநிரிசாநிபா
நிபாம ரீரிமபானி நீ

சரணம்

ஈரேழுலகமும் பேற்றும் திரிசூலி
இந்திராதி யர்க்கரு ளனுகூலி
வாராய் வல்வினை தீர்க்க மைந்தனை வந்துகாக்க நீ

சுரம்.

சா சனிபத நிபமரி கரிசா சமாரி பாமநிபசா
நிரிசகரி கரிசாரி நிசாபனி சரிகரி சநிரிசாநிபா
நிபாம ரீரிமபானி. நீ

## திருப்புகழ்.

நெ 122 பிளேட் நெ 2071.

இராகம் - இந்துஸ்தான் தோடி, தாளம் - ஆதி.

ஒலமிட்ட சுரும்பு தனதன வென
வேசிரத்தின் விழுங்கை பளீர் பளீரென
ஓசைபெற்ற சிலம்பு கலீர் கலீரென விரகலீலை
ஓர்மிடத்து லெழும்பு கூகூ கூகூவென
தேகுதிக்க உடம்பு வெரீர் வெரீரென
ரோமகுச்சு நிறைந்து சிலீர் சிலீரென அமிர்தமாரன்
ஆலயத்துள்ளிருந்து குபீர் குபீரென
வேர்வைமெத்தவிழுந்து சலார் சலாரென
ஆமுத்த மணிந்து ஆளா ஆளாவென மருவுமாரன்

## அகப்பை சித்தர் பாடல்.

நெ 123 பிளேட் நெ 1958.

இராகம் - சஹானு, தாளம் - ஏகம்.

தூரா தி தூரமடி அகப்பேய்
தூரமு மில்லையடி
பாராமற் பாரடியோ அகப்பேய்
பாழ்வினை தீரவென்றால்
உண்டாக்கிக் கொண்டதல்ல அகப்பேய்
உள்ளது சொன்னேனே
கண்டார்கள் சொல்வாரோ அகப்பேய்
கற்பனை யற்றதடி
நாலு மறைகாணு அகப்பேய்
நாதனை யார்காண்பார்
நாலுமறை முடிவில் அகப்பேய்
நற்குரு பாதமடி

மூல மில்லையடி அகப்பேய்
முப்பொரு ளில்லையடி

மூல முண்டானால் அகப்பேய்
முத்தி யுண்டாகுமடி.

## சிவபுரம் திருப்புகழ்.

நெ 124 பிளேட் நெ 2404.

இராகம் - சங்கராபரணம்; தாளம் - ஆதி.

மனமெனும்பொருள் வானறை கால்கனல்
மதியைவென்று பராபர ஞானநல்
வழிபெறும்படி நாயடி யேனைநின் வகையாலே
மனமெனும்பொருள் வானறை கால்கனல்
வடிவுகொண்டதி லேமதிமூணெழு
வழிபெறும்படி நாயடி யேனைநின் அருள்தாராய்
செனனிசங்கரி யாரணி நாரணி
விழலிஎன்குண பூரணி காரணி
சிவைபரம்பரை யாகிய பார்வதி அருள்பாலா

## ராம தியானம்.

நெ 125 பிளேட் நெ 2000.

இராகம் - தேசிகமுகாரி, தாளம் - சாப்பு.

(அநுபல்லவியிலிருந்து எடுப்பு)

நேமத்துடனே ஹரி நாம முச்சரித்தால்
காமக்குரோத லோப மா மத மாச்சர்யம்
போமே சுகம் பெறலாமே ரா

பல்லவி

ராமநாமம்செய் ஜென்ம சாபல்ய மாமே
சுகம் பெற லாமே ரா

அநுபல்லவி

நிலையில்லா வாழ்வு நிச்சயமற்ற காயம்
அலைகடல் துரும்பைப்போ லலைந்து மயங்காதே
சுகம் பெற லாமே ஈ

## பட்டினத்தார் பாடல்.

நெ 126 பிளேட் நெ 1780.

இராகம் - ஸ்ரீராகம்.

பொன்னாற் பிரயோசனம் பொன்
படைத்தார்க்குண்டு பொன்படைத்தோன்
றன்னாற் பிரயோசனம் பொன்னுக்கங்
கேதுண்டத் தன்மையைப்போ
லுன்னாற் பிரயோசன வேணதெல்லா
முண்டுனைப் பணியு
மென்னாற் பிரயோசன மேதுண்டு
காளத்தி யீச்சுரனே.

வேதத்தின் உட்பொருள் மண்ணாசை
மங்கையரை விட்டுவிட
போதித்தவன் மொழி கேட்டிலையோ
செய்த புண்ணியத்தால்
ஆதித்தன் சந்திரன்போல் வெளிச்
சமதாம் பொழுது
காதற்ற ஊசியும் வாராது காணுங்
கடை வழிக்கே.

சேலம் - அம்மாகண்ணு.

நெ 127 இராகம் - தோடி, தாளம் - ரூபகம்.

பல்லவி

என்னடி மெத்தத் தனுக்கு காட்டுறாய்
நானறியேன் போடி எ

அநுபல்லவி

சொர்னமருவு தணிகைமேவு சுப்ரமண்யமகிபா
சேராபாதத்தைச் சேராயோ அவர்
சூதும் வாதும் நானறிவேனடி எ

சரணம்.

அடியுனக்கும் அவர்தனக்குநான்
அஞ்சிப்பயந்தது பொய்யோ
புரட்டிப்பார்த்து மிரட்டுறுயோடி
திருப்பிவித்தது பிழையோ
எடுக்கிருய்வெகுசூது எகுமென்னுயிரிப்போது
அவர்பிணங்கு மென்னவிப்போது நான்
தடுத்துவஞ்சகஞ்சொன்னல் சொல்லுக்கிரண்டுண்டோ
தலைக்குமிஞ்சின ஆக்கினைவேறுண்டோ எ

நெ 128 பிளேட் நெ 45.

இராகம்-பியாகு, தாளம்-ஆதி.

பல்லவி

கடைக்கண்ணால் பாராய் கவலையைத் தீராய் க

அநுபல்லவி

அடைக்கலமாயுன்தாளை அடுத்தேன்பழனியப்பாயிந்தவேளை

சரணம்

இல்லாமை யென்னுங் கோரம்
பொல்லாத துர் விசாரம்
சொல்லாதிலையே என் சவிஸ்தாரம்
எல்லாம் அறிந்ததுதானே இந்நேரம் க
இன்னம் எளியவன்மீது துன்பம் செய்யலாகாது
என் மனந்தனில் உந்தனை யல்லாது
பின்னொருவரை நினைந்தறியே னிப்போது க

தவமுனிவர்கள் துதி சிவகிரி யுறைநிதி
உவரி சுவரவிடு வடிவேலதிபதி
புவியிலடிமை துரை சாமி தயவித்ததி க

## திருவிடைமருதூர் பவானி.

நெ 129. இராகம்-பியாக், தாளம்-சதுரஸ்ரஜாதி ரூபகம்.

பல்லவி

டாரே-நாமேமுஹம்மது முஸ்தபாமனு
ப்யாரே லாஹோஜி நா

அநுபல்லவி

முஸ்தபாகீரி நாமேமுஹம்மது பியாரே லாஹோஜி நா

சரணம்

லேத்வமேரி கிங்கரமேரி கிங்கண சசிடுவணு
அகியணுச்சிடுவா கிங்கடுவாலேபோ
லேத்வமேரி நிமதஜுமதஜாரி
ரேனுமய்யா ரெலாகிஹோஜி நா

## தாயுமானவர் பாடல்.

நெ-130. இராகமாலிகை

இனியேதனக்குன்னருள் வருமோவெனக்கருதி
 யேங்குதே நெஞ்சமையோ
இன்றைக்கிருந்தாரை நாளைக்கிருப்பரென்
 றெண்ணவோ திடமில்லையே
அனியாயமாயிந்த வுடலைநானென்றுவரு
 மந்தகர்க் காளாக்கவோ
வாடித்திரிந்துநான் கற்றதுங்கேட்டது
 மவலமாய்ப் போதல்நன்றோ
கனியேனும்வரியசெங் காயேனுமுதிர்சாகு
 கந்தமூ லங்களேனுங்

கனல்வாதைவந்தெய்தி யள்ளிப்புசித்துநான்
 கண்மூடி மௌனியாகி
தனியேயிருப்பதற் கெண்ணினேனெண்ணமது
 சாமிநீ யறியாததோ
சர்வபரிபூரண வகண்டதத்துவமான
 சச்சிதா னந்தசிவமே.

## தனகோடியும், சகோதரியும்.

நெ-131 பிளேட்-நெ 134.

இராகம்-பரசு, தாளம்-சாபு.

இந்தா விபீஷணா லங்காபுரி ராச்சியம் இந்
இந்த்ராதிதேவர்கள் உள்ளநாள்வரைக்கும் இந்

வேதம் உள்ளளவும் வேத கீதம்உள்ளளவும்—பாரி
சாதமுள்ளளவும் பஞ்ச பூதமுள்ளளவும்
 இந்தா இந்தா இந்தா இந்தா இந்

கார் உள்ளளவும் கடல் நீர்உள்ளளவும்—ஈரேழ்
பாருள்ளளவும் என்றன் பேருள்ளளவும்
 தந்தேன் தந்தேன் தந்தேன் தந்தேன் இந்

கேள்வியும் நீயே பிரதாவியும்நீயே—என்
ஆவியும்நீயே சிரஞ்சீவியும் நீயே—என்
சொன்னேன் சொன்னேன் சொன்னேன் சொன் இந்

## சேலம் - கோதாவரி.

நெ 132 பிளேட் நெ 40

இராகம் - மோகனம், ஏகதாளம்.

பல்லவி

அருமருந்தொரு தனிமருந் தம்பலத்தே கண்டேனே

அநுபல்லவி

திருமருந்துடன் பாக மருந்து
தில்லையம்பலத் தாடு மருந்து
இருவினைக ளறுக்கு மருந்து
ஏழையடியார்க் கிரங்கு மருந்து அ

சரணம்

கொன்றைதுப் பை யணிந்த மருந்து
கோவைமீதிற் படர்ந்த மருந்து
மன்றினுள்ளே நின்றாடு மருந்து
மாணிக்கவாசகர் கண்ட மருந்து அ

நெ 133 பிளேட் நெ 196.

இராகம் - காம்போதி, கண்டஜாதி - அடதாளம்.

பல்லவி

பேயாண்டிதனைகண்டு நீயேண்டிமையல்கொண்டாய்
பெண்களுக் கழகாமோ

அநுபல்லவி

மாயாண்டி சுடலையில் வாழ்வாண்டி காளிமுன்
வாதாடி சூதாடி வழக்காடி நிற்பாண்டி பே

சரணம்

கள்ளப்பெண் வீட்டிலே கலந்து திரிவாண்டி
காலனைக்காலா லுதைத்துக் கொண்டாண்டி
ஊரூர்க்கூர் பிச்சைக்கு ஓடாடித் திரிவாண்டி
உற்றார்பெற்றாரில்லை யொருவ னவன்தாண்டி பே

கீதாமிர்த களஞ்சியம் ஏழாம்பாகம் முற்றிற்று.

---

M. V. PRESS. CHOOLAI, MADRAS.

---

நெ 134 திருத்தாண்டகம்.

அரியானை யந்தணர்தஞ் சிந்தையானை
அருமறையினகத்தானை யணுவையார்க்குந்
தெரியாததத்துவனைத் தேனைப்பாலை
திகழொளியைத் தேவர்க்கடங்கோனைமற்றைக்
கரியானைநான்முகனைக் கனலைக்காற்றைக்
கனகடலைக்குலவரையைக் கலந்துநின்ற
பெரியானைப்பெரும்பற்றப் புலியூரானைப்
பேசாதநாளெல்லாம் பிறவாநாளே.

## லோகாம்பாள்.

அருட்பா.

நெ 135 இராகம்-காம்போதி.

மனமெனுமோர் பேய்க்குரங்கு மடப்பயலேநீதான்
மற்றவர்போ லெனைநினைத்து மருட்டாதேகண்டாய்
இனமுறவென் சொல்வழியே யிருத்திஎனிற்சுகமா
யிருந்திடுநீ யென்சொல்வழி யேற்றிலையானலோ
தினையளவுன் னதிகாரஞ் செல்லவொட்டேனுலகஞ்
சிரிக்கவுனை யடக்கிடுவேன் திருவருளாற்கணத்தே
கனவிலெனை பிரியாயோ யாரெனவிங்கிருந்தாய்
ஞானசபைத் தலைவனுக்கு நல்லபிள்ளைநானே

திருத்தாண்டகம்.

நெ 136 இராகம் - அரிகாம்போதி.

குலம்பொல்லேன் குணம்பொல்லேன் குறியும்பொல்லேன்
குற்றமே பெரிதுடையேன் கோலமாய
நலம்பொல்லே னான்பொல்லேன் ஞானியல்லே
னல்லாரோ டிசைந்திலே னடுவேநின்ற

விலங்கலேன் விலங்கலா தொழிந்தேனல்லேன்
வெறுப்பனவு மிகப்பெரிதும் பேசவல்லேன்
இலம்பொல்லே னிரப்பதல்லா வீயமாட்டே
னென்செய்வான் ருேன்றினே னேழைநானே.

## பார்வதி அம்மாள்.

### இராமாயண கீர்த்தனே.

நெ 137 இராகம் - செஞ்சுருட்டி.

தாளம்-சதுர்ஸ்ரஜாதி த்ருபுடை.

பல்லவி

ஆரடா குரங்கே இங்கேவந்த நீ ஆரடா குரங்கே ஆ

அநுபல்லவி

ஆரடா குரங்கே அறிவாயோ லங்கையை
வார சிங்காசனம்போல் வாலிட்டெனிலும்
மேலிட்டிருக்கிருய் ஆ

சரணம்

அச்சமில்லாமல் அடங்கிச்சொல்லாமல்
நிச்சயவனகிங்கரர் நிறுத்தமில்லாமல்
நிசாசரர்களும் அசோகவனமும்
திசாதிசையில்வியு வீசியெறிந்த நீ ஆ

கம்பத்தின்மேலே காலனைப்போலே
சம்புமாலியும் சேனுதிபரையும் கொன்றெருகாலே
சிக்ஷைசெய்வேனென்று கக்ஷியுடனே வந்த
அக்ஷதனைக்கூட பக்ஷணஞ்செய்த நீ ஆ

நிந்தனை சீச்சீ நீயொரு பூச்சி
இந்திரசித்தனுன்னோடே எதிர்த்தென்னகண்காக்ஷி
இடிக்கவே கட்டி யடிக்கவோ பல்லாற்
கடிக்கவோ ரத்தங் குடிக்கவோ நீ ஆ

## ஷண்முகி வடிவு.

காவடிச்சிந்து.

நெ 138 பிளேட்-நெ 380.

இராகம் - அபுரூபம்.

என்னடி நான்பெற்ற மங்கை யிருகொங்கை களிற்சங்கை
யெண்ண வெத்தனை கோடியே செங்கை விர
விடமேவளர் நகரேகைகள் மிகவேபடு வதைதோகையி
லேய்ந்த முருகவேள் கிள்ளி யுனைத்
தோய்ந்ததோ சொல்லடி கள்ளி

அன்னவயற் செந்தூர் வாசன் அன்பர் நேசன் நாளும்
அண்ணாமலைக்கவி ராசன் பாடும்
அமுதச்சுவை தருமுத்தமிழ் களபத்தொடு கமழ்பொற்புய
அற்புத வேலன்செய் ஜாலம் தன்னாற்
கற்பழிந்தாயோ விக் கோலம்

சித்தசன் கொக்கோகநூலை யந்திமாலை யொடுகாலை வைத்துச்
சிந்திப்ப தாச்சுதுன் வேலை சிமிழ்ச்
சின்னத்தன மடவஞ்சியே யுன்னைபபணி வொடுகெஞ்சியே
சேவற்கொடியோன் பூஞ்சோலை என்ன
தேடியே புரிந்தானோ லீலை

மெத்தப்பிரமைகொண்டேங்கி கொங்கைவீங்கி நேசப்பாங்கி
மாரை விட்டுத்தனியாக நீங்கி வடி
வேலுக்கதிபதி மையலே மேலிட்டலரிய தையலே

வெட்கத்தைப் போக்கடித் தாயே காசு
வேசைத் தனம்படித் தாயே
இன்னம் விவாகமே யில்லை கமழ்கொல்லை வெடிமுல்லை குழ
லெங்குஞ் சிங்காரித்து வில்லை கந்த
மினிதாகிய களபந்தன கனமேருவி லணிகின்றனை
இப்படியே தலை விதியோ பெண்ணே
செப்படியே யிது மதியோ
சன்னதமாங் காமப்பேயே பிடித்தாயே வேப்பங்காயே
போலச் சாதம் வெறுத்தாயே நீயே பெருஞ்
சண்டாளியே கண்டோர்நிகழ் கொண்டேபழி விண்டார்நம்
சாதிக்கெல்லா மொரு வடுவே வரத்
தான்பிறந்தாய் வந்து நடுவே
வண்ணப் பயிரவிதோடி ராகம்பாடி யுறவாடிச் சப்ர
மஞ்சத்திலே சென்று கூடி எங்கும்
வையகத்திலிது உறியா அந்த
வாலை மகனுக்கும் வெறியா

நெ 139 பிளேட் நெ 380.

இராகம் - அபுரூபம்.

ஆறுமுகவடி வேலவனேகலி யாணமுஞ் செய்யவில்லை சற்று
மச்சமில்லாமலே கைச்சரசத்துக்
கழைக்கிறு யென்ன தொல்லை
மீறியகாம மில்லாதபெண்ணோடே விளம்பாதே வீண்பேச்சு
சும்மா வெள்ளைத்தனமாக துள்ளுகிறாய் நெஞ்சில்
வெட்கமெங்கே போச்சு
மேட்டிமைஎன்னிடம் காட்டுகிறுயினி வேறில்லையோஜோலி
யிதை வீட்டிலுள்ளோர் கொஞ்சங்
கேட்டுவிட்டாலது மெத்தமெத்தக் கேலி

தாட்டிகஞ்சேர்கழு காசலமாநகர் தங்குமுருகோனே
யிந்திர ஜாலத்தினு லென்னைக்
காலைப்பிடித்தாலும் சம்மதியேனுனே

சக்கரை கட்டிபோல் வள்ளி தெய்வானையாந்
தையலுனக்கிலையோ ரண்டு தையலரைச்சேரும்
பையலுனக்கென்ன தானுமொரு நிலையோ. ஆறு

## இராமாயண பதம்.

நெ 140 பிளேட்-நெ 1239.

இராகம்-உசேனி, தாளம்-சதுரஸ்ரஜாதி-ரூபகம்.

பல்லவி

எப்படி மனந் துணிந்ததோ சாமி
வனம்போய்வருகிறே னென்றுலிதைஎற்குமோ பூமி எ

அநுபல்லவி

எப்பிறப்பிலும் பிரியவிடேன் என்றுகை தொட்டீரே
ஏழையான சீதையை நட்டாற்றிலே விட்டீரே எ

சரணம்

கரும்பு முறிந்தாப்போலே சொல்லலாச்சுதே
ஒருக்காலும்பிரியேனென்று சொன்னசொல்லும்போச்சுதே

வருந்தி வருந்தித் தேவரீர் வெல்ல
வார்த்தையால் கொல்லாமற் கொல்ல
இரும்பு மனதுண்டாச்சு தல்லோ
என்னைவிட்டு போகிறேனென்று சொல்ல எ

## தாயுமானவர் பாடல்.

நெ 141 பிளேட் - நெ

### இ ரா க மா லி கை.

பண்ணேனுனக்கான பூசையொருவடிவிலே
 பாவித்திறைஞ்ச வாங்கே
பார்க்கின்றமலருடு நீயேயிருத்தியப்
 பனிமல ரெடுக்கமனமோ
நண்ணேனலாபவிரு கைதான்குவிக்கவெனி
 ஞணுமென் னுளநிற்றிநீ
நான்கும்பிடும்போ தரைக்கும்பிடாதலா
 ஞன்பூசை செய்யன்முறையோ
விண்ணேவிணுதியாம் பூதமேநாதமே
 வேதமே வேதாந்தமே
மேதக்கேள்வியே கேள்வியாம்பூமிக்குள்
 வித்தேயவ் வித்தின்முளையே
கண்ணேகருத்தே யெனெண்ணேயெழுத்தே
 கதிக்கான மோனவடிவே
கருதரியசிற்சபையி லானந்தநிர்த்தமிடு
 கருணு கரக்கடவுளே.

## அ ரு ட் பா.

நெ 142 பிளேட்-நெ 1242.

### இராகமாலிகை.

ஈராறுகாதிலே யான்சொன்ன மொழியிலே
 எள்ளளவுங் கேட்கவில்லையோ
இக்கலியுகத்திலே கயிலையங் கிரியிலே
 யென்னென்ன புதுமைசெய்தாய்

பாரானதிற்பெரிய மெய்ஞ்ஞான பண்டிதா
பன்னிருகண் ணில்லையாசொல்
பாவையர்கள்மோகமா யருணகிரி செந்தமிழ்
பாட்டின்மேற் நினைவுற்றவா
சீரானபொற்கடக பணியுமணி மார்பனே
தேவர்பணி பொற்பாதனே
செட்டிமகனே திலக கட்டிமணி யேயிந்த
தெந்தினஞ் செய்யலாமா
தீரகெம்பீரா ஒய்யாரா செந்தூரா
செஞ்சேவற் கொடிக்கதிபா
செம்பொனம்பலசில சம்புகந் தருள்பாட
தென்பரங் கிரிவேலனே.

## சிவக்கொழுந்து.

௳ 143 இராகம் - கமாஸ், தாளம் சதுரஸ்ரஜாதி - ரூபகம்.

பல்லவி

பார்க்கப் பார்க்கத் திகட்டுமோ நின் பாத தெரிசனம் ப

அநுபல்லவி

யார்க்குமானந்தம் பொழியுந்தில்லை
தாண்டவராயா நின்பாதம்
தாதாநிதபமபா பாபாதபமகமா
தாதாநிதபமபா பாதாதபமகமா
கமபமபத பதநிதஸநி நிகரிகநிஸ
நிரிஸநித ஃபமபதநி ஸநிதபமகரிஸ பா

சரணம்

தில்லைமூவாயிரவர்கள் தினமும் பூசித்திடும்பாதம்
சிற்சபையில் தித்திமி தோமென்றாடியபாதம்
எல்லையில்லாபாதம்என்றனுக் கருள்செய்திடும்பாதம்
இரவும்பகலுமாய்கோபால கிருஷ்ணனேத்தும்பாதம்

தாதாநிதபமபா பாபாதபமகமா
தாதாநிதபமபா பாபாதபமகம
தாதாநிதபமபபா பாபாகமமா
தாதாநிதபமபபா பாபாதபமகதபமகமமா
கமபமத பதநிதநிஸ நிஸரிகாரிஸ
நிரிசநிதநி தபமபதநி ஸநிதபகரிஸ பா

அருட்பா.

நெ 144 இராகமாலிகை.

பணிந்தறியே னன்புடனே பாடுதலுமறியேன்
படித்தறியேன் கேட்டறியேன் பத்தியிற்பூமாலை
யணிந்தறியேன் மனமுருகக் கண்களினீர்பெருக
வழுதறியேன் தொழுதறியே னகங்காரஞ்சிறிதும்
தணிந்தறியேன் றயவறியேன் சத்தியவாசகமுந்
தானறியே னுழுந்தடித்த தடியதுபோலிருந்தேன்
துணிந்தெனக்குக் கருணைசெய்த துரையேஎன் னுளத்தே
சுத்தநடம்புரிகின்ற சித்தசிகாமணியே.

வனஜாட்சி.

நடேசர்கீர்த்தனை.

நெ 145 பிளேட் நெ 1195.

இராகம் - தேவகாந்தாரி, தாளம் - ஆதி.

பல்லவி

ஆருக்குத்தான் தெரியும் அவர் மகிமை
அம்பல நாடக மாடிய பெருமை ஆ

அநுபல்லவி

பாருக்குள் மாந்தர்கள் காண்பது தொல்லை
பதஞ்சலி பண்ணிய புண்ணிய மில்லை ஆ

சரணம்

காதிற்குழையது விழுந்தது காட்டார்
கண்டிடுமென்பர்கள் விண்டிடமாட்டார்
பாதலம்நடுங்கவே தாண்டவம்போட்டார்
பக்தியில்லாதவர் தங்களைக்கூட்டார் ஆ

தேவர்கள் பூமழை கொண்டுசொரிந்தார்
சித்தவித்யாதிகள் கண்டுமகிழ்ந்தார்
பாவலர்நாவல ருள்ளங்குளிர்ந்தார்
பார்வதியம்மனும் கூடவிருந்தார் ஆ

பாலகிருஷ்ணன்பணிந் தேத்தும்ப்ரதாபம்
பணிந்திடும்பேர்க்கில்லை புண்ணியபாபம்
சீலமறிவுஉனக் கேன்சுப்ரதீபம்
தேவமனோகர மாகியரூபம் ஆ

## தாயியும், வெங்கம்மாவும்.

நெ 146 சங்கராபரணம் - தாளம், ஆதி.

பல்லவி.

முத்துக் குமரையனே
பத்தர்க்கருள் மெய்யனே முத்

அநுபல்லவி.

நித்தமன்புசெய் குறத்தியத்தினொடு நித்தமகிழுநாதா
உத்தமர் மனத்தில் வாழுநாதா போதா முத்

சரணங்கள்

ஆசையோடு குகதாசன் வாழ்த்துமுரு கேசபாசநாசா
அன்பர் விஸ்வாசா சுப்ரகாசா நேசா முத்

பாலகானருள் பாலகனே பரிபாலகனே லோலா
ஊலகர் ஞாலவால பாலா சீலா முத்

## எ. சாமி நாயுடு, காமசேன ரசிகா.

௵ 147 இராகம் - ஆனந்தபைரவி, தாளம் - ஆதி.

பல்லவி

மருமாங்குயிலின் மொழியாளனேர்
நடையானை யான்மறவேனே—மதிவதனமுடைய மரு

அநுபல்லவி

நறுந்தேன் துளிக்கு மலரடிக்குழலிங்குனது
தீனமான நடையே மரு

சரணம்

கருநீலவிழிகன மேமனம்நியங்கு முகவடிவகாகமே-இனமே
முறையாயிதுசரியல மானினியுனது வாய்திறந்து ஒரு
வார்த்தை யேனும் உரையா மரு

## இராமாயணம்.

௵ 148 இராகம் - மோகனம், தாளம் - ஆதி.

பல்லவி

பூஷணமிகு புகழ்பெருகு புண்ய விபீஷணா பூ

அநுபல்லவி

ஆதரிப்பேன்நான் அஞ்சாதே நீயாருக்கும்நல்லவனை பூ

சரணம்

இன்னமும் உனக்கு சஞ்சல மேனோ
எவ்வேளையும் நான் கைவிடு வேனோ
சொன்னதே இப்போ துயரப் படாதே
துஷ்ட ருவணனிடம் போகாதே பூஷ
நத்தையில் முத்து பிறந்ததுபோலே
ராக்ஷதர் குலத்தில் நீ பிறந்தாயே
உத்தமா என்னை நாடிவந்தாயே
உலகில்உனக்கு குறையேது மில்லையே பூஷ

சீதைக்கு உன்மகள் திருச்சடையாலே
சிந்தையின் துயரத்தைத் தேற்றிடலாலே
பூதலமீதினி லுந்தனைப்போலே
புண்ணியனுண்டோ இனிமேலே பூஷ

நெ 149 இராகம் - சங்காபரணம், தாளம் - ஆதி.

பல்லவி

எப்போதான் இரங்குமோ
ஈசா நின் திருவுள்ளமே எப்

அநுபல்லவி.

ஒப்பில்லா தவர்துதி யோங்கும் சந்திரமதி
அப்பனே ஐயனே ஆறுமுக வடிவேலனே எப்

பொன்னதாய் பொருளதாய்
போற்றுந் தயாநிதியாய்
என்னை யாட்கொள்ள வாராய்
இகபா மிரண்டினும்
சண்முகா சண்முகா தாநின் தரிசனமே எப்

நாராயணசாமி ஐயர்.

திருவாசநல்லூர்

நெ 150 இராகமாலிகை.

தாயுமானவர் பாடல்.

ஆழாழி கரையின்றி நிற்கவில்லையோ கொடிய
வாலமமு தாகவில்லையோ
அக்கடலின் மீதுவட வனனிற்கவில்லையோ
வந்தாத் தகிலகோடி

தாழாம னிலைநிற்க வில்லையோமேருவுந்
தனுவாக வளையவிலையோ
சப்தமே கங்களும் வச்ரதாருணையாற்
சங்கரித் திடவில்லையோ
வாழாது வாழவே யிராமனடி யாற்சிலையு
மடமங்கை யாகவிலையோ
மணிமந்த்ர மாதியால் வேண்டு சித்திகளுலக
மார்க்கத்தில் வைக்கவிலையோ
பாழான வென்மனங் குவியவொரு தந்திரம்
பண்ணுவ துனக்கருமையோ
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணனந்தமே.

கீதாமிர்த களஞ்சியம் எட்டாம்பாகம் முற்றிற்று.

---

எமது விலாசம்:—
R. D. மூர்த்தி & பிரதர்ஸ்,
நெ-140. சூளை ஹைரோட், மதராஸ்.
*M. V. PRESS. CHOOLAI, MADRAS.*

---

## M. கார்த்திகேசு.

நெ 151 இராகம் - பியாகடை, தாளம் - சாப்பு.

தெலுங்கு.

பல்லவி

தர்மவர்த்தினி மாயம்மா நம்மிதிநேனு
தாசுடனிநனு ப்ரோவ வலனம்மா தர்

அநுபல்லவி.

தர்மவசனுனி ராணிவலபொம்மா
நித்யமுகானி சரணமேகதி
வேறே லேதம்மா வெகாஞ்சி பொம்மா தர்

தநிதநீதப மபதமாகரி கா ரீ கமகரி கமபமதப
தநிதநீதப மபதமாகரி கா ரீ கமகரி கபபமதப
தாசரிச பகரி சரிசநி தபநிந்நீதப கமமாகரி பமகரி தர்

சரணம்

தன்னசெர்ப்பமுலந்து படிபொல்லி தல்லிடில்லி
என்னிஜென்மமு லேகவினலேதா
என்னிஜென்மமு லுன்னதோமல்லி தேவர்களோயனு
அதிபயமு தீர்ப்பவே தல்லி கற்பகவல்லி த

தப்புலென்சக ப்ரோவ இதுவலதா நாமுறலேதா
தலச்சி சூசிதே நீகு தயராதா
ஒப்புகுன்னு நாமுறலு வினலேதா ஊரகுலதா நீ
உதிரமுல புட்டினவாடு காதா பாவனனிகாதா த

தநிசநீதப மபதமாகரி காரீ கமகரி கமபமதப
தநிதநீதப மபதமாகரி காரீ கமகரி கமபமதப
தாசரிச பகரி சரித பரிச நிந்நீத பம்மாகரிப த

## அருட்பா.

ெ 152 இராகம் - பைரவி.

கான்படும்பாடு சிவனே யுலகர் நவிலும் பஞ்சு
தான்படுமோசொல்லத்தான்படுமோ எண்ணத்தான்படுமோ
கான்படுங்கண்ணியின் மான்படுமாறு கலங்கிநின்றே
னேன்படுகின்றனே யென்றிரங்காயென்னி லென்செய்வனே.

ெ 153 இராகம் - நாட்டக்குறிஞ்சி, தாளம் - ஆதி.

பல்லவி

எக்காலத்திலும் மறவேன் - இனிநானே
எக்காலத்திலும் மறவேனே

அநுபல்லவி

மைக்காலனை யக்காலத்தில்
மடியவுதைத்த அடிமலரை நான் எக்

விடையையும் கொன்றைத் தொடையையும் மதிச்
சடையையும் மழுப்படையும் தோ
லுடையையும் மணி இடையையும் விழிக்
கடையையும் நலமடையவே நான் எக்

புரத்தையும் மதனுரத்தையும்கட்ட தரத்தையும்
ஐந்து சிரத்தையும் தாசர் வரத்தையும்
இகபரத்தையும் பஞ்சாக்ஷரத்தையும்
சிதம்பரத்தையும் நான் எக்

## ஸ்ரீமத் வைத்திய நாத பாகவதர்.

நந்தன் கீர்த்தனை.

ெ 154 இராகம் - பியாக், தாளம் - ஆதி பல்லவி.

ஞாயந்தானோ நீர் சொல்லும் ஓய் நந்தனாரே
நம்ம சாதிக்கடுக்குமோ

அநுபல்லவி

சேரியிலில்லாத வழக்கம்-நீர்
செய்துகொண்டுவந்த பழக்கம்-இந்த
ஊரிலெங்குமது முழக்கம்-வெகு
உறுதியாச்சுது ஒழுக்கம்-இது ஞா

சரணங்கள்

பறையருக்கேது தைப்பூசம்-அதை
பார்க்கவேயுனக்கு விஸ்வாசம்-சிறு
பயல்களுக்கேயுப தேசம்-நீர்
பண்ணிவைத்ததெல்லா மோசம்-இது ஞா

சிதம்பரமென்கிற பேச்சு-நாங்கள்
செய்திடுங்காரியம் போச்சு-அது
மதம்பிடித்ததுபோ லாச்சு-இந்த
மண்டலப்பறையருக் கேச்சு-இது ஞா

## தேவாரம்.

௭௬ 155 இராகம் - சுருட்டி.

கற்றோங்கரியோம்பிக் கலியைமுன்வாராமே
செற்றார்வாழ்தில்லைச் சிற்றம்பலமேய
முற்றாவெண்டிங்கண் முதல்வன்பாதமே
பற்றாநின்றாரைப் பற்றாபாவமே.

கோணாகணையானாற் குளிர்தாமரையானுங்
காணார்கழலேத்தக் கனலாயோங்கினன்
சேணார்வாழ்தில்லைச் சிற்றம்பலமேத்த
பாணாநோயெல்லாம் வாழாமாயுமே.

சங்கீத சாகித்திய வித்துவாம்சியாகிய

## கோயம்புத்தூர் தாய்.

அருட்பா.

நெ 156 பிளேட் நெ 1222

இராகம் - எதுகுல காம்போதி.

கல்லார்க்குங் கற்றவர்க்குங் களிப்பருளுங் களிப்பே
காணார்க்குங் கண்டவர்க்குங் கண்ணளிக்குங் கண்ணே
வல்லார்க்கும் மாட்டார்க்கும் வாமளிக்கும் வாமே
மதியார்க்கும் மதிப்பவர்க்கு மதிகொடுக்கு மதியே
நல்லார்க்கும் பொல்லார்க்கும் நடுநின்ற நடுவே
நரர்களுக்கும் சுரர்களுக்கும் நலங்கொடுக்கும் நலமே
எல்லார்க்கும் பொதுவில்நட மிடுகின்ற சிவமே
யென்னரசே யான்புகலு மிசையுமணிந் தருளே.

அருட்பா.

நெ 157 பிளேட் நெ 1224.

இராகம் - நாதநாமக்கிரியை.

வாழையடி வாழையென வந்ததிருக்கூட்ட
மரபினில்யா னொருவனன்றோ வகையறியேனிந்த
ஏழைபடும் பாடுனக்குத் திருவுளச் சம்மதமோ
விதுதகுமோ விதுமுறையோ விதுதருமந் தானோ
மாழைமணி பொதுநடம்செய் வள்ளல்யா னுனக்கு
மகனலனோ நீயெனக்கு வாய்த்ததந்தை யலையோ
கோழையுல குயிர்த்துயர மினிபொறுக்க மாட்டேன்
கொடுத்தருள்நின் னருளொளியைகொடுத்தருளிப்பொழுதே

நெ 158 பிளேட் நெ 1226.

இ ரா க மா லி கை.

காகமா னதுகோடி கூவிநின் ருலுமொரு
　　கல்லின்முன் னெதிர்நிற்குமோ
கர்மமானதுகோடி முன்னே செய்தாலுநின்
　　கருணைப்பிர வாகவருளைத்
தாகமாய் நாடினமை வாதிக்க வல்லதோ
　　தமியனேற் கருட்டாகமோ
சற்றுநிலை என்பதும் வெளியாச்சு வினையெலாஞ்
　　சங்கேதமாய்க் கூடியே
தேகமா னதைமிகவும் வாட்டுதே துன்பங்கள்
　　சேராமல் யோகமார்க்க
சித்தியோ வாவில்லை சகசநிஷ் டைக்குமென்
　　சிந்தைக்கும் வெகுதூரநான்
ஏகமாய் நின்னோ டிருக்குநா ளெந்தநா
　　ளின்னுளின் முற்றுறுதோ
இகபா மிரண்டினிலு முயிரினுக் குயிராகி
　　யெங்குநிறை கின்றபொருளே.

நந்தனார் கீர்த்தனை.

நெ 159 பிளேட் நெ 1233.

இராகம் - மாஞ்சி, தாளம் - ரூபகசாப்பு.

பல்லவி.

வருகலாமோ வையா-உன்ற
னருகினில் நின்றுகொண் டாடவும்பாடவும்

அநுபல்லவி.

பரமகிருபாநிதி　யல்லவோ　யிந்தப்
பறையனுபசாரஞ்　சொல்லவோ　உந்தன்
பரமானந்தத் தாண்டவம்　பார்க்கவும் நானங்கே வ



சரணங்கள்

பூமியிற் புலேயனுய்ப் பிறந்தேனே நான்
புண்ணியஞ்செய்யாம லிருந்தேனே
சாமியுன் சன்னதி வந்தேனே பவ
சாகரத்தையு மிழந்தேனே கரை
கடந்தேனே சரண மடைந்தேனே தில்லே
வரதா ப்ரதாபமும் பாபமுந் தீரவே வ

## அருட்பா.

நெ 160 பிளேட் நெ 1223.

இராகமாலிகை.

விண்படைத்த புகழ்தில்லே யம்பலத்தானெவர்க்கும்
மேலான அன்பருள மேவுநடராஜன்
பண்படைத்த வெனேயறியா விளம்பருவந்தனிலே
பரிந்துவந்து மாலேயிட்டான் பார்த்தறியான்மீட்டும்
பெண்படைத்த பெண்களெலா மவமதித்தேவலது
பேசுகின்ருர் கூசுகின்றேன் பிச்சியெனலானேன்
கண்படைத்துங்குழியில்விழகணக்குமுண்டோவவன்றன்
கணக்கறிந்தும் விடுவேனே கண்டாயென்ருேழி.

காஞ்சீபுரம் - குமாரசாமி பத்தர்.

## தேவாரம்.

நெ 161 இராகம் - செஞ்சுருட்டி.

மாற்றறியாத செழும்பசும் பொன்னே
மாணிக்கமேசுடர் வண்ணக்கொழுந்தே
கூற்றறியாத பெருந்தவருள்ளக்
கோயிலிருந்த குணப்பெருங்குன்றே

வேற்றறியாத சிற்றம்பலக்கனியே
விச்சையில்வானவர் மெச்சும்விருந்தே
சாற்றறியாதவர் சாற்றுங்களித்தாய்
தனிநடராஜவென் சற்குருமணியே.

## தாயுமானவர் பாடல் பராபரக்கண்ணி.

நெ 162 இராகம் - எதுகுல காம்போதி.

பாராயோவெந்தன்முகம் பார்த்தொருக்காலென்கவலை
தீராயோவாய்திறந்து செப்பாய்பராபரமே
முத்தேபவளமே மொய்த்தபசும்பொற்சுடரே
சித்தேயென்னுள்ளத் தெளிவேபராபரமே
எண்ணாதவெண்ணமெல்லா மெண்ணிஎண்ணிஏழைநெஞ்சம்
புண்ணாகச்செய்ததினிப் போதும்பராபரமே

## திருவாசகம்.

நெ 163 இராகம் - ஆபி.

முத்திநெறியறியாத மூர்க்கரொடுமுயல்வேனைப்
பத்திநெறியறிவித்துப் பழவினைகள்மாறுவண்ணம்
சித்தமலமறிவித்துச் சிவமாக்கியெனையாண்ட
அத்தனெனக்கருளியவா றார்பெறுவாரச்சோவே.

நெ 164 இராகம் - அம்ருதவாஹினி, தாளம் - ஆதி.

பல்லவி.

ஸ்ரீராம பாதமா நீ க்ருபஜாலுநே
ஸித்தாநிகி ராவே

ஸ்ரீ

அநுபல்லவி

வாரிஜபவ ஸநகஸநந்தன
வாஸவாதி நாரதாது
லெல்ல பூஜிஞ்சே ஸ்ரீ

சரணம்.

தாரிணி ஸ்ரீலயை தாபமுதாளக
வாரமு கன்னிருநு ராஸ்சக
ஸூர அஹல்யனு ஜூஸிப்ரோசி
தாரீதி தன்யுஸேயவே த்யாகராஜநுத ஸ்ரீ

நெ 165 இராகம் - தேவாருதவர்ஷணி, தாளம் - ஆதி.

பல்லவி

எவரநி நிர்ணயிஞ்ச்சிரா நின்
னெட்லாரா திஞ்ச்சிரா நரவரு எவ

அநுபல்லவி

ஸிவுடனோ மா தவுடனோ கமல
பவுடனோ பரப்ரஹ்மனோ எவ

சரணம்

சிவமந்த்ர முனகு மாஜீவமு மா
தவ மந்த்ர முனகு ராஜீவமு ஈ
விவரமு தெலிசின கனுலகு ம்ரொக்கதா
விதாணகுண த்யாகராஜ விநுதநின் எவ

நெ 166 இராகம் - தோடி, தாளம் - ஆதி.

பல்லவி

எமனி பொகடுது எந்துகி நிர்தய
இனகுல திலகா ஸ்ரீராமையா எ

அநுபல்லவி

காமித பலதா யதுடுநீ வேகதா
கருணதோ ப்ரோவராதா கரிவரதா எ

சரணம்

ஸ்ரிதஜன மந்தார ஸித்தகிம்ஸ வேமிரா
ஸததமு வேடினதா ஸ்ம்த்தநு தீர்ச்சுரா
கதிநீவேமரி யெவருனு லேருகதா
அதிஸுந்த ராங்கா கர்ப்பபுரி வாஸா எ

## மிஸ். சுந்தராம்பாள்.

நெ 167 இராகம் - காம்போதி. தாளம் - ரூபகம்.

பல்லவி

ஏமி மாயமு ஜேஸி போதிவி
ஸ்யாம ஸுந்தரா நாதோ எ

அநுபல்லவி

நாமனோ பா வம்பு வெல்ல
வே மருநீ வெரிகியு நாயெட எ

சரணங்கள்

நீருதா கிபுடே பரிவச்சே நகி
தீருகி தீருனு ஜோருக பொங்க்கிவே
ஸாரிலே நூரிநே தாரிஜுலே டட்லு
க்ரூர வைரிதூரி பொய்யேதொர எ
மங்கள ஸ்நாநமு ரங்குக ஜேயுஸு
பொங்குசு நீம்ருத அங்க்க ஸங்க்கம்புதோ
கௌசுலிஞ்ச் சேநா ரங்குக
மங்களாங்க்துடௌ தாளவதீயஸ்ரீ எ

## நந்தன் கீர்த்தனை.

நெ 168 இராகம் - செஞ்சுருட்டி, தாளம் - ரூபகம்.

பல்லவி

சிவலோக நாதனைக்கண்டு
சேவித்திடுவோம் வாரீர் நீங்கள் சிவ

அநுபல்லவி.

பவமயங்களைப் போக்கி அவர்
பரமபதத்தைக் கொடுப்பாரந்த சிவ

சரணங்கள்

அற்ப சுகத்தை நினைந்தோம் அந்த
அரன் திருவடி மறந்தோம்
கற்பித மான ப்ரபஞ்ச மீது
கானல் ஜலம் போலே எண்ணி சிவ

மானிட ஜன்மங் கொடுத்தார் தன்னை
வருந்தக் காங்க ளளித்தார்
தேனும் பாலும் போலே சென்று
தோடியில் நின்று கொண்டு சிவ

நெ 169 இராகம்-கமாஸ், தாளம்-சாப்பு

பல்லவி.

மாதாட பாராதேனே மா ரமணனே மா

அநுபல்லவி

ப்ரீதிதோ லிதப்ராண நாதியுடனே ஒந்து மா

சரணங்கள்

அங்கள பளதிங்கள் பிசலாகி தோருதே
ப்ரங்காத ரவகேளி பீதியாகுதே சாமி மா

மந்தமாருத பந்து மருளுமாடுதே சாமி
அந்தவுளதேஹ கந்திபாடுதே சாமி மா

காமசரவு என்ன மெய்க தகலிது
நாமகிரி நரஹரி கேளியாய வேனே மா

நெ 170 இராகம்-ஆபேரி; தாளம்-ஆதி.

பல்லவி

நகுமோமு கனலேனி நாஜாலி தெலிஸி
நனுப்ரோவ ராராதா ஸ்ரீரகுவர நகு

அநுபல்லவி

நகராஜ தரநீது பரிவாரு லெல்ல
ஒகிபோதன ஜேஸ வாரலு காரே
யடுலுண்டரா நீ நகு

சரணங்கள்

ககராஜு நீயானதி விநிவேக சனலேடோ
ககநா நிகிலகு பஹுதூரம் பனினடோ
ஜகமேலே பரமாத்மா எவரிதோ மொரலிடுது
வக ஜூபகு தாளனு—நன்னேலு கோரா
த்யாக ராஜநுத நீ நகு

நெ 171 இராகம்-சுத்தபங்களா, தாளம்-ஆதி.

பல்லவி

தொலிநே ஜேஸின பூஜாபலமு
தெலிஸனு நா பாலிதைவமா தொ

அநுபல்லவி.

பலுவித முலனே தலசி கரககா
பலுகக நீவடு நேனெடு காகா தொ

சரணம்

சரிவாரலலோ சௌக ஜேஸிவு
தரபோஷகுலனு பொருகுன ஜேஸி
ஹரிதாஸ ரஹித புரமுன வேஸி
தரிஜூப குண்டக த்யாக ரார்ச்சித தொ

ஆலந்தூர் டிராமாடிக் கம்பெனி,

மனமோகன R. M. அரங்கசாமி நாயுடு.

நெ 172 பிளேட் நெ 2066.

தர்க்கப்பாடல்.

பல்லவி

வேண்டினேன் சையோகமே விலகிடாத ஸ்நேகமே
தீண்டிடாத திரேகமே தீரலே விவாகமே

சரணம்

விவாகம் ஆரம்பமே மேலுண்டாகும் பேரின்பமே
ஒவ்வாத தேனடா உனக்கிந்த துன்பமே
ஐயோயிது ஞாயமா ஆண்டவன் சகாயமா
செய்யும் சம்ப்ர தாயமா சேருவேன் கட்டாயமா
கட்டாய மன்னீதமே காரியம் பிரமாதமே
எட்டாத கொம்புத்தேனுக் கேனிந்த வாதமே
முத்துசாமி நாதனே முத்தமிழ் விநோதனே
சித்தமென்மேல் வீணே தீங்குவரும் தானே
தீங்குவாரது வாடா சேயிழையைக் கூடியே
தாங்கிடுவோ ரார்முத்து சாமிபதம் பாடியே. வே

கீதாமிர்த களஞ்சியம் ஒன்பதாம் பாகம் முற்றிற்று.

---

எமது விலாசம்:—

R. D. மூர்த்தி & பிரதர்ஸ்,

நெ-140. சூளை ஹைரோட், மதராஸ்.

M. V. PRESS. CHOOLAI, MADRAS.

---

நெ-173 பிளேட் - நெ 2067.

## நல்ல தங்காள்.

அண்ணியரே எந்தன்
அண்ணியரே எந்தன்
அண்ணியரே அண்ணியரே—எந்தன்
அண்ணனையே மணார்ந்தவளே
அணைந்தவளே புணர்ந்தவளே—எந்தன்
அண்ணனுக்கு வந்தவளே
சுகம் தந்தவளே
சீரு தந்தவளே
நீயு கந்தவளே—என்
அண்ணியரே அண்ணியரே அண்

## அலங்காரி.

தலைவலி யாலே தவித்திடும் போது
தட்டி யெழுப்பவந்த
மட்டிநீ யாரு
நல்ல தங்கை யென் பேரு
அவ ளிங்கிலே பாரு
என்ன சங்கடம் பாரு
ந:— மக்கள் பசியாலே
மிக்க துடிக்கிறார்
அ:—மக்களுக்கா ரிங்கே
வடித்துவைத் திருக்கிறார்
ந:—பிள்ளைபசி பொல்லாது
அ:—பேசாதே போ நில்லாது
ந:—மக்கள் துடிக்கிறார்

அ:—கேழ்வர கரைக்கிறுர்
ந:—பேதம் நினைக்க லாமா
அ:—பிடிவாதம் நீ செய்யலாமா
ஏதே தவ சரமா
ந:—அண்ணியரே என்
அண்ணியரே என்
அண்ணனையே மணர்ந்தவளே அண்

மதராஸ்,

மிஸ்டர் A. S. ராஜப்பா.

நெ 174 பிளேட்-நெ 2810.

இராகம் - இந்துஸ்தான், காபிதாளம் - ஆதி.

பல்லவி.

கந்தா காருண்யனே கன சேவலனே க

அநுபல்லவி

செந்தூரார் புண்ணியனே கொடி காவலனே க

சரணங்கள்

ஆதியோ டனுதியான ஐயனே முருகையனே
பொன்னே பூம்பதமே உன்னைப் போற்றினேனே
என்மே லென்கதமே பணிந் தேற்றினேனே க

தோஹையரா.

காக்ஷி யோதக டாக்ஷி மாக்ஷிகொள்
கந்தனே சிவ மைந்தனே
சாக்ஷி யோது மீனுக்ஷி யாள்தரு
சந்தனே பிர பந்தனே

தரு.

தந்தா ளாய் சரணம் இன்னம் தாமதமா
பண்கே ளாய் தருணம் அசம்பா விதமா க

மிஸ் ஆதிலக்ஷ்மூ - மைசூர்.

நெ 175 பிளேட்-நெ 2491.

இராகம்-கதனகுதூஹலம், தாளம்-ஆதி.

பல்லவி

ரகு வம்ஸ ஸுதாம் புதி சந்த்ர ஸ்ரீ
ராம ராஜ ராஜேஸ்வரா ரகு

அநுபல்லவி

அகமே மா ருத ஸ்ரீகரா
அசுரேச மருகேந் த்ரதா விநுத ரகு

சரணங்கள்

ஜமதக்னி ஜ கர்வ கண்டன
ஜயருத்ராதிவிஸ் மிக பண்டனு
கமலாப்தான் வய மண்டனு அ
கணிதாத்பத சௌர்யஸ்ரீ வெங்கடேசா ரகு

ப்ருகு நந்தனு கவி பஞ்சனு
ப்ருந்தாரகா ப்ருந்தாஹிதா
நிகமாந்த வசு புதா வனு
நீரஜாக்ஷ ஸ்ரீ வேங்கடேஸ்வரா ரகு

## நாகஸ்வரம்.

## பொன்னுசாமி பிள்ளை மதுரை.

நெ 176 பிளேட் நெ 2476.

இராகம்-ஜயந்தஸ்ரீ, தாளம்-தேசாதி.

பல்லவி

மருகேலரா ஓ ராகவா மரு

அநுபல்லவி

மருகேல சரா சாரூப பராத்
பரஸூர்ய ஸுதா கரலோசன மரு

சரணங்கள்

அன்னிநீவனுசு அந்தரங்கமுன
தின்னகா வெதகி தெலிஸி கொண்டினே
நின்னேகானி மதி னென்ன ஜாலனொருவ
நன்னுப்ரோவ வைய த்யாகராஜ நுத மரு

## கோயம்பத்தூர் தாயி.

நெ 177 பிளேட் நெ 1232.

கருப்பத் தூறிப் பிறவாதே
கனக்கப் பாடுற் றுழலாதே
திருப்பொற் பாதத் தநுபூதி
சிறக்கப் பாவித் தருள்வாயே
பரப்பற் றூருக் குரியோனே
பாத்தைப் பாலுக் கனியோனே
திருக்கைச் சேவற் கொடியோனே
ஜெகத்திற் சோதிப் பெருமாளே.

நெ 178 பிளேட் நெ 1206.

இராகம்-கரஹரப்ரிய, ஆதிதாளம்-பல்லவி.

சக்கனி ராஜ மார்க்கமு லுண்டக
ஸந்துல தூரனே ஓமனஸா சக்

அநுபல்லவி.

சிக்கனி பாலு மீகட யுண்டக
சப்பனி கங்கா மாதமு லேயே சக்

சரணம்

கண்டிகி சுந்தா தாமகு ரூபமேமுக்
கண்டினேட செலகே நாமமே த்யாகரா
ஜிண்டனே பாகநெல கொன்னுசி தைவமெயிடு
வண்டி ஸ்ரீஸாகேத ராமுனி பக்த்யனே. சக்

நெ 179 பிளேட் நெ 4094.

நல்லதங்காள் நாடகம்.

இராகம் - சாவேரி, தாளம் - சாப்பு.

ஆறிலும்சாவுதான் நூறிலும்சாவுதான்
மக்களா நான் பெற்ற மக்களா
ஆரிடம் நோகலாம் மக்களா
என் மக்களா நான்பெற்ற மக்களா ஆ
ஒரு ரோமம் போனாலும்
கவரிமான் வாழாது
உயிர் போகும்
உடனேதான்—மக்களா ஆ
பச்சைக்கிளி வளர்த்துப்
பருந்துக்கிறை கொடுத்த
பழமொழிபோ லாச்சதே
மகனே அருமை மகனே நான்பெற்ற மகனே

வாடா மதிமுகனே
ஓடாதே என் சுதனே
மகனே மகனே மகனே. ஆ

நெ 180 பிளேட் நெ 4370.

## இராம நாடகம்—சீதை புலம்பல்.

இராகம் - முகாரி, தாளம் - ஆதி.

பல்லவி

பாவிப்பெண் சென்மம் ஏன்
பெற்ருே மையையோ பா

அநுபல்லவி

ஆவிபோலப்பிரமன் அழிந்துபோற யமனன்ருே
தாவி இத்துயருறத் தலைவிதி கூட்டலாமா பா

சரணம்

தையலாளே தவித்தே உருகத்தகுமோ
வினைப்படி செய்திட என்கதிதான்—பாவி பா

யவன் ராவணன் கையினில் பட்டு
வாடிட தாணியினில் பா

நெ 181 பிளேட் நெ 3826.

## வேறு சந்தம்.

இராகம் - தாளம் - ஏகம்.

திமிரவு ததியனைய நரக
செனன மதனில் விடுவாயேன்
செவிடு குருடு வடிவு
குறைவு சிறிது மிகவும் அணுகாதே

அமரர்வடிவு மதிககுலமு
மறிவு நிலையும் வரவேநின்

அருள தருளி யெனையுமனதோ
டடிமை கொளவும் வரவேணும்

சமரமுகவே லசுரர்
தமது தலைகளுருள மிகவேநீள்

சலதி யலற நெடிய
பதலை தகர அயிலை விடுவோனே

வெமர வணையி லினிது
துயிலும் விழிகள் நளினன் மருகோனே

மிடறு கரியர் குமரர்
பழனி விரவு மமரர் பெருமாளே.

**K. T. நடராஜம் பிள்ளை.**

நெ 182 பிளேட் நெ 2204.

அம்பா மதுரை மீனாக்ஷி வுன்
அருமையான காக்ஷி கிடைத்தால்
அடிமைக்கெது தாக்ஷி
அது வுலக சாக்ஷி
அது வுலக சாக்ஷி
அது வுலக காக்ஷி
அது வுலக காக்ஷி என் அம்

நீ சும்மா யிருப்பதும் ஏது என்
துன்பம் சொல்லொணாது கடைக்கண்
பார்த்தருளிப் போது
சுகமருளிப் போது
சுகமருளிப் போது
சுகமருளிப் போது
சுகமருளிப் போது என் அம்

ரத்தின மூக்குத்தி அலங்காரி முத்து
சாமி சொல்லு தாரி சொக்கேசர்
முத்தும் கொள்ளும் பாரி
மோகன கெம்பீரி

நெ 183 பிளேட் நெ 3674.

இராகம் - ஸ்ரீராகம், சாப்பு - தாளம்.

பல்லவி

திரிலோகமும் புகழும் சுந்தர
தீர வீர சூர னானே
இன்னாட்டுக் கதிகாரன்
விண்ணாட்டுக் கதி சூரன்
நன்னாட்டுக் கதிகாரன்
நாகரீக சம்போகன் நானே
தாணி புகழ் கெம்பீரன்
அரிவையர்க் கிசைந்த மாரன்
பரிபூரண சுகவுதாரன்
பாத மீதில் ஓதும் வேதன் நானே

கீதாமிர்த களஞ்சியம் பத்தாம் பாகம் முற்றிற்

---

எமது விலாசம்:—

R. D. மூர்த்தி & பிரதர்ஸ்,

நெ-140. சூளை ஹைரோட், மதராஸ்

M. V. PRESS. CHOOLAI, MADRAS.

## 50 பகவத் தியான

# பதிக பாட்டுக் கொத்து.

தில்லை நடராஜப்பத்து, பரமசிவன் தோத்திரம், அ
சலேசுரர்பதிகம், உண்ணாமுலையம்மன் பதிகம், சூரியந
ரப் பதிகம், ஸ்ரீராமர் பதிகம், ஷை தோத்திரம், சனிபக
தோத்திரம், திருநாமபதிகம், திருநீற்றுபதிகம், கெருடப்
சுப்பிரமணியர்விருத்தம், ஷை பதிகம், ஆறுமுகசுவாமி
தம், தணிகாசலவடிவேலர் பஞ்சரத்தனம், தண்டாயுத
அமுர்தப்பத்து, மயில்விருத்தம், வேல்விருத்தம், மா
கம், வாரப்பதிகம், காமாக்ஷியம்மன் விருத்தம், வடிவு
மன் விருத்தம், அங்காளம்மன் பதிகம், திரோபதை
விருத்தம், பாவாடைராயன் விருத்தம், அழுகணிசி
டல், கடுவெளிசித்தர் பாடல் குதம்பைசித்தர் பாட
முகக் கடவுள்பேரில் ஆனந்த கேலிப்பதம், லக்ஷி
வாக்குவாதம், ஸ்ரீரங்க நாயகிக்கும் நாச்சியாருக்கு
வாதம், தனலக்ஷிமி தைரியலக்ஷிமி தர்க்கம், விவேக
கீர்த்தனை, மெஞ்ஞான தங்கம், காக்ஷிக்கண்ணி, பஞ்
திருப்புகழ், மிட்டாய் பாட்டு, கிளிப்பாடல், ரெ
ஊசல், விலைமாதர் கும்மி, தலைவிதி கீர்த்தனை, குள்
சிந்து, பஜனமாசோபனம், தங்கந்தில்லாலே பாட்டு
கம், ஷை இரண்டாம் பாகம், குழந்தை தாலாட்
பாட்டு, புராப்பாட்டு, ஷை இரண்டாம்பாகம், புஷ்
கல்லுளிமங்கனுக்கும் கருப்பாய் அம்மாளுக்கும்
களுக்கடைச் சிந்து.

மேற்காட்டிய 50 ஸ்தோத்திரப் பதிகம், சி
டல் பாட்டு கீர்த்தனை கும்மி தாலாட்டு இவையா
எழுத்தில் பிழையின்றி அச்சிட்ட சுத்தப்பதிப்பு
பேஜ்சயிஸ் ஸ்டிப்புபயிண்டு புத்தகம் 1-க்கு விலை

ஷை லிம்ப்பு பயிண்டு 0—10—0

---

எமது விலாசம்:— **R. D. மூர்த்தி & பிரதர்**
நெ 140. கூளை ஹைரோட், ப

